REGD. No. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி. மு. க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5] சென்னை: ஐப்பசி 27உ செவ்வாய் (12—11—57) ☆ ★ வெளியூர்: ஐப்பசி 28உ புதன் (13—11—57) [இதழ் 129

## 'எல்லாம் எல்லோருக்கும்'

—

கர்னூல், நவ. 11—

'எல்லாம் எல்லோருக்கும்' என்ற கொள்கையை, கிராம மக்கள் தங்களின் வாழ்க்கை வழியாகக் கொள்ளவேண்டுமென ஆந்திர கவர்னர் பீம்சேன் சச்சார், இங்கிருந்து 18 மைல் தொலைவில் உள்ள கிராம மக்களிடை பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

# குடிசை வாழ்வோர் அவலநிலை கண்டு ஆட்சியாளர் வெட்கப்பட வேண்டாமா?

## மனிதன் மாடுபோல வண்டி இழுக்கும் கொடுமை கண்டீரா?

## சென்னைப் பொதுக்கூட்டத்தில் அண்ணா கண்டனம்

8-11-57 மாலை, சென்னை-கோமளீசுவரன்பேட்டையில் நடந்த மறுமலர்ச்சி மன்றத் துவக்க விழாப் பொதுக்கூட்டத்தில் அண்ணா அவர்கள் பேசுகையில், சட்ட மன்றத்தில் நமது கழக உறுப்பினர்கள் பல பிரச்சினைகளையும் பற்றிப் பேசுவதற்கு, தக்க புள்ளிவிவரங்களைச் சேகரித்துத் தந்துதவ வேண்டும் என்று போது மக்களையும், கழகத் தோழர்களையும் கேட்டுக்கொண்டார். எப்படிப்பட்ட புள்ளிவிவரங்கள் தேவை என்பதைச் சில உதாரணங்களுடன் விளக்கினர்; அவருடைய பேச்சின் பிற்பகுதி இங்கு தரப்படுகிறது (முற்பகுதி ஏற்கனவே வெளியாகியுள்ளது) :—

"இந்தப் பகுதியில், சித்ரா டாக்கீசுக்கும்—கெயிட்டி டாக்கீசுக்குமிடையே கூவம் ஆற்றின் ஓரத்தில் எத்தனைக் குடிசைகள் இருக்கின்றன; அவற்றில் எத்தனைப் பேர் வசிக்கிறார்கள்; அவர்கள் படும் அவதிகள் என்னென்ன என்பதைப் பற்றிய புள்ளிவிவரங்களைச் சேகரித்து இந்தப் பேட்டை இளைஞர்கள் எங்களுக்குத் தரலாம்.

"அந்தக் குடிசைகளில் வாழ்வோர் மனிதர்கள்தானா என்று கூடப் பலர் சந்தேகப்படுவார்கள். 'பிரும்மா' இப்படியும் சிலரைப் படைத்திருப்பானா—என்று வைதிகர் பாஷையில் கேட்கத் தோன்றுகிறது.

"அந்த ஆற்றோரத்தில். சதுப்பு நிலத்தில், தரை மட்டத்திலிருந்து 3 அடி உயரமுள்ள குடிசைகளிலே அலங்கோல நிலையில் வசித்துவரும் அவர்கள், எப்படியெப்படியெல்லாம் அல்லல்படுகிறார்கள் என்பதை நீங்கள் குறித்துத்தரலாம். அவர்களைப் பற்றி மந்திரிகளுக்குத் தெரிய முடியாது; அவர்கள் அந்தக் குடிசைகளைப் பார்க்கவும் வாய்ப்பிருந்திருக்காது. நான் இந்தப் பக்கம் வரும்போதெல்லாம், இந்தப் பரிதாபக் காட்சியைக் கண்டு மனம் சஞ்சலப்படுவேன்.

"நாங்கள் திராவிட நாட்டுப் பிரிவினையைப் பற்றிமட்டும் பேசுவதற்குச் சட்டசபைக்குச் செல்லவில்லை; இப்படிப்பட்ட பல பிரச்சினைகளையும் எடுத்துப் பேசித்தான் வருகிறோம்; அதற்கான தகவல்களை நீங்கள் தந்துதவ வேண்டும்.

"தோழர் அன்பழகன் அவர்கள் சட்டசபையில், கூவம் ஆற்றோரத்தில் குமுறும் ஏழைகளின் பிரச்சினையைப் பற்றிப் பேசினர். அப்போது அவரது பேச்சு, பல காங்கிரஸ்காரர்களுக்குப் புரியவில்லை. அவர் பேசியது அப்படியொன்றும் கடினமான தமிழுமல்ல—எளிய தமிழில்தான் பேசினர்; ஆனாலும், அவர்களுக்கு விளங்கவில்லை. அவர்கள் புரிந்துகொள்ள முடியாததற்குக் காரணம், இவ்வளவு கஷ்டப்படுகிறவர்களும் இருப்பார்கள் என்பதை அவர்கள் எதிர்பார்க்கவில்லை.

"அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் பேசும்போது, 'நானும் மற்ற காங்கிரஸ்காரர்களும் சுதந்தரத்துக்காகப் பாடுபட்ட காலத்தில், சுயராஜ்யம் கிடைத்தால் போலீஸ் இருக்காது; சிறைச்சாலைக்கு வேலை இருக்காது; தேனும் பாலும் தெருவிலே ஓடும் என்றுதான் சொன்னோம்; ஆனால், அது இன்று நடக்கவில்லை' என்று கூறி முடித்தார்.

"அமைச்சரே இப்படி எண்ணிக்கொண்டிருந்தபோது, காங்கிரஸ் எம்.எல்.ஏ.-க்கள் மீது தவறில்லை. சென்னை காங்கிரஸ் எம்.எல்.ஏ.-க்களும், அமைச்சர்களும் இங்குள்ள ஆதித் திராவிட மக்களின் பாழடைந்த குடிசைகளை ஒருமுறை வந்து பார்க்க வேண்டுகிறேன்.

"மனிதனும் மாடாக மாறி வண்டி இழுப்பதை கொத்தவால் சாவடிப் பகுதியிலும், சோற்றுக்கு அவர்கள் ஆலாய்ப்பறந்து 'சைனா பஜார்' ஓரங்களிலே சோற்றுக்கூடைக்காரப் பெண்மணிகளிடம் ஓரணா, இரண்டணா கொடுத்து சோற்றை வாங்கிக் கையிலே வைத்துக்கொண்டு புசிப்பதையும் தமிழ்நாட்டு மந்திரிகள் பார்க்க வேண்டும். சில சமயங்களில் பத்மினி - ராகினி நடனங்களைப் பார்க்கட்டும்; எம். எஸ். சுப்புலட்சுமியின் பாட்டையும் கேட்கட்டும்; வேண்டாமென்று சொல்லவில்லை. இடையிடையே, இத்தகைய ஏழை படும் அவலக் காட்சிகளையும் பார்க்க வேண்டுகிறேன். அப்படிப் பார்த்துப் புரிந்துகொண்டிருந்தால், அன்பழகன் பேசும்போது, 'ஆம், ஆம்' என்று ஒத்துக்கொண்டு, வேதனைப்பட்டிருப்பார்கள்; வெட்கப்பட்டிருப்பார்கள்; ஆயாசப்பட்டிருப்பார்கள் — ஆச்சரியப்பட்டிருக்கமாட்டார்கள்.

"'நாங்கள் 150 பேர்; நீங்கள் 15 பேர்; உங்களால் என்ன செய்ய முடியும்' என்று கேட்கிறார்கள்.

"கூவம் ஆற்றுக் குடிசைகள் ஒழிக்கப்பட்டு அவர்களுக்கு நல்ல வசதி செய்து தரப்பட வேண்டும் என்று நாங்கள் 15 பேர் சொன்னால், 'அங்கு அப்படிப்பட்ட குடிசையே இல்லை' என்போர் 150 பேராக இருந்தால், அவர்கள் சொல்லுவதுதான் சனநாயகத்தில் உண்மை என்று நிரூபிக்கப்படும்.

"'முதுகுளத்தூர்' பற்றி நான் சட்டசபையில் பேசுகையில், மந்திரி சுப்பிரமணியம் அவர்கள் குறுக்கிட்டு, 'நான் எண்ணிக்கையைப் பற்றிக் குறிப்பிட்டதன் நோக்கம், மக்கள் எங்களிடம் அதிக நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்பதுதான்'—என்று கூறினர்.

"மக்கள் எதையெதை எப்படி நம்புகிறார்கள்? மக்களை எப்படி நம்பவைத்தார்கள்? தேர்தல் காலத்தில் 50 இலட்சம் பேர்களை நம்பவைத்தார்கள்; அவர்கள் நம்பத்தக்க வார்த்தைகளைச் சொன்னார்கள்—அதனால் நம்பினார்கள்.

"வெட்டவெளியில் கழைக்கூத்தாடி ஒருவன் 'டோரா' அடித்து, வித்தை காட்டுகிறான் என்றால், ஏராளமான மக்கள்கூடி வேடிக்கைப் பார்ப்பார்கள். தனக்குத் தெரிந்த ஒருசில வித்தைகளைக் காண்பித்தபிறகு அவன், ஒரு கூடையில் ஒரு கீரியின் தோலையும், இன்னொரு கூடையில் பாம்பின் தோலையும் வைப்பான்—'மகான்களே, மகாராசாக்களே, கடைசியாக ஒரு வித்தை காட்டப்போகிறேன்; இதோ இருக்கும் இந்த கீரியின் தோல் உயிருள்ள கீரியாகவும், அதோ இருக்கும் அந்தப் பாம்பின் தோல் உயிருள்ள பாம்பாகவும் மாறி இரண்டும் சண்டைபோடும் காட்சியைக் காட்டப் போகிறேன்; அதற்குமுன்னால், காலணா, அரையணா போடுங்கள்; அக்காசு உங்கள் வாய்க்கு வெற்றிலைப்பாக்கு—என் வயிற்றுக்குச் சோறு'—என்று சொல்லி, எல்லோரையும் காசு போடச் சொல்லுவான். காசு வசூலான பிறகு மூட்டையைக் கட்டிக்கொண்டு அந்த இடத்தை விட்டுப் புறப்படுவான்.

"அவன் முன்புவைத்த தோல்—தோலாகத்தானிருக்கும்; பாம்பும் வராது—கீரியும் வராது; 'ஏன் கீரி—பாம்பு சண்டை காட்டவில்லை?'—என்று யாராவது கேட்டால், 'என்ன தெரு ஐயா இது; நேற்று மயிலாப்பூரிலே இந்த வித்தை காட்டினேன்; 7½ ரூபாய் கிடைத்தது. இன்று இந்தத் தெருவிலே 7 அணாதான் கிடைத்தது; ஆகையினாலே இங்கு அந்த வித்தையைக் காட்டமாட்டேன்' என்பான்.

"முதலில் சில வித்தைகளைச் செய்துகாட்டினன். ஒரு பந்தை பெட்டிக்குள்ளே போட்டு பூட்டிவிட்டு, மீண்டும் அதை ஒரு பையன் மூக்கிலிருந்து வரவழைத்தான். அந்தப் பந்து உண்மையில் மூக்கினுள்ளேயிருந்து வந்ததா, அல்லது வித்தைக்காரன் தன் கையிலேயே மறைத்து வைத்திருந்து போட்டானா என்பதை மக்கள் புரிந்துகொள்ளமுடியவில்லை; இப்படி, பல வித்தைகளைக் காட்டினன்; எனவே, 'கீரி—பாம்பு சண்டையும் காட்டுவான்' என்று மக்கள் நம்பினார்கள்.

"அதைப்போலத்தான், காங்கிரஸ்காரர்களை மக்கள் நம்பினார்கள்.

"முதலில் அவர்கள் வெள்ளையனை ஓட்டினார்கள்; 'வெள்ளையனை ஓட்டுகிறோம்' என்று அவர்கள் சொன்ன நேரம் வெள்ளையன், தானே ஓட இருந்த நேரம்—காக்கை உட்காரவும் பனம்பழம் விழவும் சரியாக இருந்தது.

"இதிலே நம்பிக்கை வைத்தார்கள் மக்கள். பிறகு, 'நாங்கள் மக்களையெல்லாம் வாழ வைக்கிறோம்; ஓட்டு போடுங்கள்' என்றார்கள்—ஓட்டும் போட்டார்கள் மக்கள்; 'வரியைக் குறைப்போம்' என்று கூறி ஓட்டுக் கேட்டவர்கள், பதவிக்கு வந்ததும் வரியை அதிகமாகப் போட்டார்கள்.

"இன்று நாங்கள் சொல்லுவதைத் தப்பு என்று மந்திரிகள் சட்டசபையில் சொல்லவில்லை; நிறைவேற்ற முடியவில்லையே. என்ன செய்வது?' என்றுதான் கேட்கிறார்கள். ஆசிரியர்களின் சம்பளத்தை அதிகப்படுத்தச் சொன்னால், 'அதை நானும் ஒத்துக்கொள்கிறேன்; ஆனால், அதிகப் பணத்துக்கு வழியில்லையே' என்றுதான் அமைச்சர் சொல்கிறார்.

"இந்தப் புத்தி, தேர்தல் காலத்தில் எங்கே போயிற்று? இதைத் தேர்தல் காலத்திலேயே நீங்கள் சொல்லியிருந்தீர்களானால் உங்களுக்கு இத்தனை ஓட்டுகள் விழுந்திருக்குமா?

"'பணம் இல்லையே, அதற்கு என்ன வழி?' என்று எங்களைக் கேட்கிறீர்களா? கேட்டால் சொல்லுவோம்—'கேளுங்கள்; கொடுக்கப்படும்; தட்டுங்கள்; திறக்கப்படும்'—என்று, ஏசுநாதர் சொல்லியதைத்தான் நாங்களும் சொல்கிறோம்.

"நீங்கள் கேட்க வேண்டியவர்களைக் கேட்கவில்லை; தட்ட வேண்டியவைகளைத் தட்டவில்லை.

"டி.வி.எஸ். கம்பெனிக்கு 600-700 பஸ்கள் ஓடுவதாகச் சொல்லுகிறார்கள்; நாள் ஒன்றுக்கு ரூ. 8,000 வருமானம் கிடைப்பதாகக் கேள்வி; நீ அங்கு கேள்-கொடுக்கப்படும். நீ அங்கே கேட்கமாட்டேன் என்கிறாய்; ஆனால் திரும்பத் திரும்ப, 'பணம் எங்கே-பணம் எங்கே' என்று மட்டும் கேட்கிறாய்.

"பட்டுப் புடவையை இடுப்பில் கட்டிக்கொண்டே, 'எங்கே என் பட்டுப் புடவை?' என்றால், என்ன அர்த்தம்?

"நீ கேட்டால் கொடுப்பார்கள்; தேர்தல் காலத்தில் டாடா கம்பெனிக்காரன் இலட்சக்கணக்கான ரூபாய் கொடுத்தான்-வாங்கிக்கொண்டாய்; கோர்ட்டில் நீயே இதை ஒப்புக்கொண்டிருக்கிறாய்; ஏனென்று கேட்டால், 'அவன் கொடுத்தான்-நான் வாங்கிக்கொண்டேன்' என்று சொல்லுகிறாய்.

"மனித உருவில் உலவும் கழுகுகள் தனக்குக் கிடைக்கும் இலாபத்திலிருந்து கோத்திக் கொடுக்கின்றன. அதை—இலட்சக்கணக்கான ரூபாயை—கைநீட்டி வாங்கியிருக்கிறார்கள் இவர்கள், தேர்தல் காலத்தில்!

"இப்படிக் கேட்டால், 'நாங்கள் ஏழை மக்களை மட்டும் காப்பாற்ற மாட்டோம்; எங்களுக்கு ஏழையும்-பணக்காரனும் ஒன்றுதான்; அய்யரும்-ஆதித்திராவிடரும் ஒன்றுதான்; மயிலாப்பூரும்-வண்ணாரப்பேட்டையும் ஒன்றுதான்; எல்லோருடைய தயவும் எங்களுக்குத் தேவை; சுருக்கமாகச் சொன்னால் ஓட்டராக உள்ள ஒவ்வொருவர் தயவும் தேவை'—என்கிறார்கள்.

"காங்கிரஸ் கட்சிக்காரர்களுக்கு மக்களைப் பார்த்தால் 'ஓட்டர்' என்ற நினைவுதான் முதலில் வரும்; எங்களுக்கு, 'மனிதர்' என்ற நினைப்பு முதலிலும், பிறகு 'ஓட்டர்' என்ற நினைவும் வரும்.

"உதாரணமாகச் சொல்ல வேண்டுமானால், கோவில் திரு விழாவிலே இனிப்புப் பண்டம் விற்பவன்—அவன் உண்மையான பக்தனாக இருந்தாலும்கூட—சாமியையோ, கருடவாகனத்தையோ கவனிக்கமாட்டான்; தாய்மார்கள், தங்கள் இடுப்பில் எத்தனை குழந்தைகளை வைத்திருக்கிறார்கள் என்பதைத்தான் கணக்கிடுவான்,

"அதைப்போல, காங்கிரஸ்காரர்களும், மக்களைவிட, ஓட்டுகளைத்தான் முக்கியமாகக் கவனிப்பார்கள். தோல் பதனிடும் தொழிலாளர்களானாலும் தொல்லைக்குரிய ஆசிரியர் தொழிலில் உள்ளவர்களானாலும், அவர்களுடைய ஓட்டுகள்தான் தேவை.

"இந்தப் பக்கத்திலே எத்தனை ஓட்டுவரும்?—'50 ஓட்டு வரும்'—'ஆகா! வருமா?' 'இல்லை; இருபதுதான் வரும்'—உடனே, வாயை மூடிக்கொண்டு வாட்டத்துடன் திரும்புவார்கள்.

"மனிதனை மனிதன் என்று கருதினால், அவர்களை கூலிகளாகவே இன்னும் விட்டு வைத்திருப்பார்களா?"

## சட்ட மன்றத்தில் 'நம் நாடு'

★

சென்னை, நவ. 11—

"'நம் நாடு' இதழைப் பாருங்கள். அதில் வரும் செய்திகளைப்பற்றி, சனநாயக அடிப்படையில் எந்த வித நடவடிக்கையும் எடுப்பதற்கில்லை"

என்று நிதி அமைச்சர் சுப்பிரமணியம், இன்று சட்டமன்றத்தில் பேசும்போது குறிப்பிட்டார்.

"தி. மு. கழகம் சட்டத்தை எந்த அளவு மதித்து நடக்கிறது என்பதற்கு இதுவே போதிய சான்றாகும்"

என்று அண்ணா அவர்கள் தனது பேச்சில் ஆதாரமாகக் காட்டினர்.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

சென்னை 12—11—57 செவ்வாய்

# கண்ணியக் குறைவான செயல்

★

அகில உலக மாநாடுகளின் பெருமைமிகுந்த வரலாற்றிற்கு, கடந்த வாரம் புதுடில்லியில் நடைபெற்ற மாநாடு ஒன்றில் இழுக்குத் தேடிவிட்டார்கள்.

களங்கம் உண்டுபண்ணியவர்கள், நடைபெற்ற அகில உலக செஞ்சிலுவைச் சங்க மாநாட்டில் கலந்துகொண்ட அமெரிக்க நாட்டுப் பிரதிநிதிகளாவர்.

இவர்களது கண்ணியக்குறைவான அந்தச் செயல், நாளும் தாழ்ந்துவரும் அமெரிக்காவின் முகத்தினை மேலும் கிழிறக்கவே உதவும்; இதுபோன்ற செயல்கள், தான் இழந்துவரும் செல்வாக்கை மீட்கவோ, தன்மீது வளர்ந்துவரும் அவநம்பிக்கையைத் துடைக்கவோ அமெரிக்காவிற்குத் துணைபுரியாது என்பதை எத்தனைமுறைதான் எடுத்து இயம்புவது?

செஞ்சிலுவைச் சங்கம் என்பது, அவதிப்படும் மக்களுக்கு, அவர்களின் நாடு, இனம், மொழி, மதம், சாதி, வகுப்பு, பால் இவைபோன்ற பாகுபாடுகளைப் பற்றிக் கவலைப்படாமல், அரசியல் நோக்கம் எதுவுமின்றி, கைம்மாறு கருதாமல் மனிதாபிமான நோக்குடன், அவதி துடைக்கப் பாடுபடும் ஒரு தேவையான சங்கமாகும்.

அந்தச் சங்கத்தின் மாநாட்டில், வேறு இடங்களில் தீர்வு காண இயலாதிருக்கும் அரசியல் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முற்பட்டதே அமெரிக்கா செய்த தவறாகும்.

அந்த மாநாட்டின் வரவேற்பாளராக இருந்து, மாநாட்டினை நடத்தித்தரும் பொறுப்பினை இந்தியா ஏற்றுக்கொண்டிருந்தது, இந்த ஆண்டு. மாநாட்டிற்கு அழைப்பிதழ்கள் அனுப்பப்பட்ட நேரத்தில், பார்மோசாவில் 'ஆட்சி செலுத்தும்' சியாங் சர்க்காருக்கு அழைப்பு அனுப்பக்கூடாது என்று செஞ்சீனப் பிரதிநிதிகள் கேட்டனர்; ஆனால், இந்திய செஞ்சிலுவைச் சங்கத்தின் . தலைவரான திருமதி ராஜகுமாரி அமிர்தகௌரி, மாநாட்டின் வரவேற்பாளர் என்ற முறையில், அந்தக் கோரிக்கையை நிராகரித்தார்; 'ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் அதிகாரம் செலுத்தும் எந்த ஒரு சர்க்காரும் அழைப்புப்பெற உரிமை உடையதே' என்ற அமிர்தகௌரியின் வாதத்தை செஞ்சீனப் பிரதிநிதிகள் ஏற்றுக்கொண்டு, கண்ணியம் காத்தனர்.

ஆனால், அமெரிக்கா செய்தது என்ன? மாநாட்டில் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தது; பார்மோசா தீவில் தனது பாதுகாப்பில் பதுங்கிக் கிடக்கும் சியாங்தான், அறுபது கோடி சீன மக்களையும் ஆளுகிறவர் என்று ஏற்றுக்கொள்ளச் சொல்லுகிற வகையில், 'பார்மோசா சர்க்காரை சீனக் குடியரசின் சர்க்கார்' என்று அழைக்கவேண்டும் என்பது அமெரிக்கா கொண்டுவந்த தீர்மானமாகும்.

மாநாட்டில் கொண்டுவரப்பட்ட இந்தத் தீர்மானம் பெரியதொரு நெருக்கடியை — மாநாடே கலைந்துவிடக்கூடிய நெருக்கடியைக் கொண்டுவந்து சேர்த்தது. பிரேசில் நாட்டுப் பிரதிநிதிகள், 'அமெரிக்காவின் இந்தத் தீர்மானத்தை, மாநாட்டின் கடைசி நிகழ்ச்சியாக வைத்துக் கொள்ளலாம்' என்ற ஒரு திருத்தத்தின் மூலம், தோன்றவிருந்த நெருக்கடியைத் தவிர்த்தனர்.

ஆனால் அமெரிக்கா, கண்ணியம் காக்கத் தவறிவிட்டது. மாநாட்டு இறுதியில், தீர்மானத்தை வற்புறுத்தி ஓட்டெடுப்பு நடத்தச்சொல்லி, சர்வதேச மாநாடுகளின் வரலாற்றுக்கு—அதுவும் செஞ்சிலுவைச் சங்கம் போன்ற அரசியல் விவகாரங்களுக்குக் கிஞ்சிற்றும் தொடர்பற்ற மனிதாபிமானச் சங்கத்தின் மாநாட்டில் அரசியல் வாதம் புரிந்து, ஒரு களங்கம் தேடிவிட்டது.

அமெரிக்காமட்டுமல்ல— உலகம் முழுவதுமே சேர்ந்து, ஒரு உண்மையை இல்லை என்று மறுப்பதினாலேயே, உண்மை இல்லை என்று ஆகிவிடாது.

அறுபது கோடி சீன மக்களை ஆளும் அதிகாரத்தை சியாங் - கே - ஷேக்குக்கு எப்படியேனும் மீண்டும் பெற்றுத் தந்துவிடும் ஆற்றல் தனது டாலரின் ஒளிக்கு உண்டென்று அமெரிக்கா கருதுகிறதா?

இந்த அமெரிக்காவின் அரவணைப்பில் 'கதகதப்பு' காணும் நாடுகள், ஒரு பெரிய அநீதியை — செஞ்சீன சர்க்கார்தான் உண்மையான சீன மக்களின் சர்க்கார் என அங்கீகரிக்க மறுக்கும் அநீதியை — ஐ. நா. போன்ற உலக நிறுவனங்களில் சட்டரீதியாக அனுமதித்துக் கொண்டிருக்கும் காரணத்தினால் அல்லவா அமெரிக்கா, தனது கௌரவத்திற்கு நேரிடுகிற பங்கத்தையும் பொருட்படுத்தாமல், டில்லி மாநாட்டில் அசம்பாவிதமாக நடந்துகொண்டிருக்கிறது?

அறுபது கோடி மக்களுக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய உரிமையை—ஐ. நா.-வில் இடம் பெறுகிற உரிமையைக் கிடைக்கவொட்டாமல் செய்வதற்கு அமெரிக்காவிற்குத் துணைபுரியும் நாடுகள், நாளை ஒருநாள் தங்களது உரிமைகளைப் பொறுத்து தகராறு கிளப்பினால், எந்த மனச்சாட்சியைக் காட்டி நியாயம்கோர முடியும் என்பதை ஏனோ எண்ணிப் பார்க்க மறுக்கின்றன.

செஞ்சிலுவைச் சங்க மாநாட்டில் அமெரிக்கா நடந்துகொண்ட விதம், சர்வதேச மாநாடுகளின் வரலாற்றிற்கு களங்கம் தேடியது மட்டுமின்றி தனக்கும் பெரிய அபகீர்த்தியையும், உலக அபிப்பிராயத்தின் முன் கண்டனத்தையும் தேடிப்பெற்றுள்ளது என்பதில் சந்தேகமில்லை.

## ஆழ்கடலில் 20000 அடி ஆழத்தில் ஆராய்ச்சி

### மனித அறிவை வளர்ப்பதற்கு மற்றொரு கருவி கண்டுபிடிப்பு

கடலுக்குக்கீழ் 20,000 அடி ஆழத்தில் புகைப்படம் எடுக்கக் கூடிய கருவியை அமெரிக்க கடற்படை தயாரித்துள்ளதாம்!

ஆழ்கடலின் கீழுள்ள பெரும் மலைகள், பள்ளத் தாக்குகள் நிறைந்த விரிவான பகுதியைப் பற்றி மனிதனின் அறிவை வளர்ப்பதற்காகக் கண்டுபிடித்துள்ள இப்புதிய கருவியில் புகைப்படம் எடுக்கும் வசதி, எதிரொலியைப் பதிவு செய்யும் வசதி ஆகியவை அடங்கியுள்ளன.

## வாயு மண்டலத்தில் பரிசோதனை நடைபெறும்?

சிட்னி, நவ. 11—

வாயு மண்டலத்தின் மேல் தட்டுகளில் வெகுதூரம் செல்லக்கூடிய ஆயுதங்களைச் செலுத்தி பரிசோதனை நடத்துவதற்குத் திட்டம் வகுக்கப்பட்டிருப்பதாக ஆஸ்திரேலிய விநியோக அமைச்சர் கூறியுள்ளார்.

## பரிசுகள் தருவதற்கு முன்வருகின்றனர்!

### உணர்ந்தபின்னரே இந்த முடிவு செய்தனர்

புதுடில்லி, நவ. 10—

இந்தியாவில் எண்ணெயும், இயற்கை வாயுவும் உள்ள இடங்களைப் பற்றி உண்மையான தகவல்களைத் தெரிவிக்கிறவர்களுக்குத் தக்க பரிசுகள் தர முடிவு செய்யப்பட்டுள்ளதாம். இதுபற்றிய தகவல்களைத் தெரிவிப்பதற்குத் தகுந்த கைம்மாறு கிடைக்காதிருந்ததால், மக்கள், தகவல்களைத் தர விருப்பமில்லாதிருந்ததாலேயே இப்போது இவ்வாறு முடிவு செய்யப்பட்டிருக்கிறதாம்!

## அமராவதி கால்வாயைத் திறந்துவிட முடிவு

### 11,822 ஏக்கருக்குப் பாசன வசதி கிடைக்கும்

சென்னை, நவ. 10—

அமராவதி பிரதான கால்வாயை முதல் தடவையாக 15—11—57-லிருந்து அநேகமாக 28—2—58 வரை பாசனத்துக்காகத் திறந்துவிட அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது.

39 மைல் நீளமுள்ள இந்தக் கால்வாய் உடுமலைப்பேட்டை வட்டத்தில் 6,318 ஏக்கருக்கும், தாராபுரம் வட்டத்தில் 5,504 ஏக்கருக்கும் பாசனமளிக்கும். நீர் பாய்ச்சப்படக்கூடிய புஞ்சைப் பயிர்கள் மட்டுமே சாகுபடி செய்யவேண்டும்.

## மொழிபெயர்க்கும் இயந்திரச் சாதனம்

### மைசூர் சட்டமன்றத்தில் பொருத்தப்படுமாம்

பெங்களூர், நவ. 11—

ஆங்கிலத்தில் கேட்கப்படும் கேள்விகள் அல்லது தகவல்களை, இயந்திர சாதனத்தின்மூலம் கன்னடத்தில் மொழிபெயர்க்கும் கருவியொன்று மைசூர் சட்டமன்றத்தில் பொருத்தப்படுமாம். இதை நிறுவதற்கு ரூ. 2½ இலட்சம் செலவாகுமெனத் தெரிகிறது.

## எந்த நோக்கத்துடன் இந்தத் திட்டமோ?

"கைத்தறி நெசவாளருக்குத் தாப்படும் உதவியைப்போல், கதர் நெய்பவர்களுக்கும் உதவியளிப்பது பற்றி சர்க்கார் ஆலோசனை செய்யும்" என்று, மத்திய—வர்த்தகத் தொழில் அமைச்சர் மொரார்ஜி தேசாய் கூறியுள்ளார்.

# இந்தியைக் கட்டாயப் பாடமாக்கும் திட்டம்

## ஆந்திர சட்டசபையில் எதிர்ப்பு

### கல்வி மந்திரியின் பதில்

ஐதராபாத், நவ. 9—

ஆந்திர மாநிலத்தில் பள்ளி இறுதி வகுப்புப் பரீட்சைக்கு இந்தியைக் கட்டாயப் பாடமாக்குவதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

ஆந்திரப் பல்கலைக்கழகச் சட்டத்தைத் திருத்தும் மசோதா சட்டசபையில் விவாதிக்கப்பட்டபோது, இந்தியைக் கட்டாயப் பாடமாக்கும் திட்டத்திற்கு எதிர்ப்பு தெரிவித்து பல உறுப்பினர்கள் பேசியதாகத் தெரியவருகிறது.

விவாதத்திற்குப் பதிலளித்த கல்வி மந்திரி எஸ். பி. பி. பட்டாபிராமராவ், 'இந்தி கற்றுக்கொள்வது இலாபகரமானது' என்று கூறி, எதிர்ப்பாளர்களின் வாயை அடக்க முயன்றிருக்கின்றார்.

"அன்னிய மொழியான ஆங்கிலத்தைக் கற்றுக்கொள்ளும்போது, இந்தியைக் கற்றுக்கொண்டால் என்ன?" என்றும் அவர் கேட்டாராம்!

ஆந்திர சட்டசபைத் தலைவர் எதிர்ப்பு

தமிழ் நாட்டில் இராசகோபாலாசாரியாரும், இதர தலைவர்களும் இந்திக்கு எதிராக நடத்தும் இயக்கத்தைத் தான் வன்மையாகக் கண்டிப்பதாக ஆந்திரப் பிரதேச சட்டசபைத் தலைவர் (சபாநாயகர்) ஏ. காளேசுவரராவ் ஒரு அறிக்கை விடுத்துள்ளாராம்.

## ரஷ்யா அனுப்பிய செயற்கைச் சந்திரன்கள்

### சில தகவல்கள்

வானவெளியில் ரஷ்யா அனுப்பிய இரண்டாவது செயற்கைச் சந்திரனிலுள்ள ரேடியோ ஒலி பரப்பும் சாதனம், முன்னரே திட்டமிட்டபடி, வேலை செய்வது நின்றுவிட்டதாகத் தகவல் தரப்பட்டிருக்கிறது.

ஒரு நாயுடன் பூமியைச் சுற்றிக்கொண்டிருக்கும் இச்சந்திரனின் வேகம் இப்போது சிறிது குறைந்திருப்பதாகவும், அதிலுள்ள நாயை உயிருடன் பூமிக்குக் கொண்டுவருவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்படுமென்றும் செய்திகள் கூறுகின்றன.

ரஷ்ய விஞ்ஞானிகள், செயற்கைச் சந்திரனிலிருந்து இந்நாயை உயிருடன் கீழே கொண்டுவந்துவிட்டால், ஒரு முக்கியப் பிரச்சினை புலனாகிவிடும்; அதாவது, செயற்கைச் சந்திரனிலிருந்து எவ்வித ஆயுதத்தையும் எந்த இடத்தின் மீதும் ஏவிவிடக்கூடிய சக்தி ரஷ்யாவுக்கு இருப்பது தெரியவரும்.

### முதலாவது சந்திரன் கீழே இறங்குகிறதாம்

அக். 4-ந் தேதியன்று ரஷ்யா பறக்கவிட்ட முதலாவது செயற்கைச் சந்திரன் கீழே இறங்க ஆரம்பித்திருக்கிறதாம். 630 மைல் உயரத்தில் பறந்து கொண்டிருந்த அச்சந்திரன், இப்போது 500 மைல் உயரத்தில் பறந்து கொண்டிருப்பதாகச் செய்தி ஒன்று தரப்பட்டிருக்கிறது.

## 50,000 பவுன் பரிசு!

லண்டன், நவ. 11—

அடுத்த சில ஆண்டுகளில், சந்திர மண்டலத்திற்குச் சென்று பூமிக்கு நலமுடன் திரும்பும் முதல் மனிதனுக்கு ரொக்கமாக 50,000 பவுன் பரிசு வழங்குவதாக இங்கு வெளியாகும் 'பீப்பிள்' என்ற இதழ் அறிவித்துள்ளது; இந்தப் பரிசுத் திட்டம் வெறும் வேடிக்கை அல்லவென்றும், இப்பரிசைப் பெறுவதற்கு ஒரு மனிதன் சந்திர மண்டலத்தில் இறங்க வேண்டுமென்பதில்லையென்றும், சந்திர மண்டலத்தை வட்டமிட்டுவிட்டுத் திரும்பினாலே போதுமென்றும் அவ்விதழ் அறிவித்திருக்கிறதாம்.

## இந்தியாவுக்கு ரூ. 60-கோடி கடன்

### தொழிற்சாலைகள் நிறுவ ரஷ்யா தருகிறது

தமிழ்நாட்டுத் தொழில்வளர்ச்சிக்கு கிடைக்கும் தொகை எவ்வளவு?

புதுடில்லி, நவ. 11—

இந்தியாவில், ரஷ்யாவின் பணஉதவியுடன் சில குறிப்பிட்ட தொழில் நிறுவனங்களைத் துவக்குவதற்கு வகைசெய்யும் ஒப்பந்தமொன்று ரஷ்யாவுக்கும்—இந்தியாவுக்குமிடையே நேற்று முன்தினம் கையெழுத்தாயிற்று.

இதன்படி, 500 மில்லியன் ரூபிள்கள் (ரூ. 60-கோடி) ரஷ்யாவிடமிருந்து இந்தியாவுக்குக் கடனாகக் கிடைக்கும்.

இப்பணத்தைக் கொண்டு, ஒரு கனரக இயந்திரங்களை உற்பத்தி செய்யும் நிலையம், ஒரு நிலக்கரிச் சுரங்க இயந்திர உற்பத்தி நிலையம் ஒரு மூக்குக் கண்ணாடித் தொழிற்சாலை, ஒரு மின்சார உற்பத்தி (தெர்மல்) நிலையம் (2,50,000 கிலோவாட்ஸ்), மற்றும் நிலக்கரி பதன நிலையங்கள் ஆகியவை இந்தியாவில் ஏற்படுத்தப்படுமாம்.

மேற்படி மின்சார உற்பத்தி நிலையம் நெய்வேலியில் ரூ. 16 கோடி செலவில் முதலில் ஏற்படுத்தப்படுமெனத் தெரிகிறது.

மற்றும் கனரக இயந்திர உற்பத்தி நிலையத்திற்கு ரூ. 18 கோடியும், நிலக்கரிச் சுரங்க இயந்திர உற்பத்திக்கு ரூ. 8 கோடியும், மூக்குக் கண்ணாடித் தொழிற்சாலைக்கு ரூ. 85-இலட்சமும், சேர்பா நிலக்கரிச் சுரங்கத்துக்கு ரூ. 8-கோடியும் செலவிடப்படுமெனத் தெரிகிறது.

இத்திட்டங்களுக்கான செலவு ரூ. 51·35 கோடி போக ரூ. 10 கோடி மிச்சப்படுமென்றும் கூறப்படுகிறது; இந்த மிச்சப்பணத்தை எப்படிப் பயன்படுத்துவது என்பதை இருநாட்டு அரசாங்கங்களும் கலந்து ஆராயுமாம்.

இக்கடன் தொகை 2½ சதவிகித வட்டியுடன் 12 ஆண்டு சமதவணைகளில் திருப்பித்தரப்பட வேண்டுமாம்.

இத்திட்டங்களுக்கான இந்தியத் தொழில் நுணுக்கக் குழுவினருக்கு ரஷ்யாவில் அவசியமான பயிற்சியளிக்கவும் ஒப்பந்தத்தில் வசதி செய்யப்பட்டுள்ளது.

இவ்வொப்பந்தத்தின் விளைவாக அயல்நாட்டுச் செலாவணியை இந்திய சர்க்கார் மிச்சப்படுத்தி, ஐந்தாண்டுத் திட்டத்துக்குச் செலவிட்டு, திட்டத்தைத் துரிதப்படுத்த முடியுமாம்.

இவ்வொப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ளபடி ரஷ்யாவிலிருந்து 1960-க்குள் எல்லா இயந்திரங்களும் இந்தியாவுக்கு வந்து சேர்ந்துவிடுமாம்.

ரஷ்யா சார்பில் திரு. என். எ. ஸ்மெலோவும், இந்தியா சார்பில் மத்திய மந்திரி சபைச் செயலாளர் எம். கே. வெள்ளோடியும் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர்,





## இராமநாதபுரம் மாவட்டத்தில் மு. கருணாநிதி

### ஆர்.எஸ். பாண்டியன், தென்னரசு கலந்துகொண்டனர்

இளையான்குடி - சாலை நகர் தி.மு.கழக—மஜீத் நினைவுப் படிப்பகத் துவக்கவிழாப் பொதுக்கூட்டம் 19—10—57 மாலை 6 மணிக்கு தோழர் பாவா தலைமையில் நடைபெற்றது.

பறம்பை உழவர் சங்கத் தலைவர் தோழர் நாகலிங்கம், சாலை ஜமாலின் ஆகியோர் பேசியபின், தோழர் எஸ்.எஸ். தென்னரசு கழகக் கொள்கைகளை விளக்கிப் பேசினார்.

பின்பு தோழர் ஆர். எஸ். பாண்டியன் ஓர் அரிய உரை நிகழ்த்தினார்.

இறுதியாகத் தோழர் மு. கருணாநிதி எம். எல். ஏ. அவர்கள் பேசுகையில் தோழர் மஜீத் செய்த தியாகத்தைப் பாராட்டியும், சட்ட மன்ற நடவடிக்கைகளை விளக்கியும் பேசினார்.

கூட்டத்தில் இந்தி கண்டனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

கூட்டத்திற்கு சுமார் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட மக்கள் வந்திருந்தனர்.

சிவகங்கை—வரவேற்பு

அன்றுமாலை சிவகங்கை தி. மு. க. சார்பில் மு. கருணாநிதி அவர்களுக்கு கோர்ட் வாசலில் ஒரு வரவேற்பு அளிக்கப்பட்டது. தோழர்கள் ஆர். எஸ். பாண்டியன், எஸ். எஸ். தென்னரசு ஆகியோருக்கு மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டன.

திருப்புத்தூர் — தென்மாப்பட்டு பொதுக்கூட்டம்

அன்று இரவு 11 மணிக்கு திருப்புத்தூர்— தென்மாப்பட்டில் மாபெரும் பொதுக்கூட்டம் தோழர் மாணிக்கம் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் மு. கருணாநிதி, ஆர். எஸ். பாண்டியன், தென்னரசு, ராசாக்கிளி, பி. எஸ். மணியம், பரமசிவம், அ. குருசாமி ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## தூத்துக்குடியில்

### காஞ்சி-கல்யாணசுந்தரம்

தூத்துக்குடி, நவ. 5—

'நம் நாடு' பொறுப்பாசிரியர் தோழர் காஞ்சி-கல்யாணசுந்தரம் அவர்கள் 3—11—57 காலை 9 மணியளவில் தூத்துக்குடி வந்து சேர்ந்தார்; நகரச் செயலாளர் ஜோசப், தோழர் எம். எஸ். சிவசாமி முதலியோர் அவரை இரயில் நிலையத்தில் வரவேற்றனர்.

காலை 10 மணிக்கு சண்முகபுரம் இரத்தினசாமி உண்ணாமலைத்தாய் திருமண நிகழ்ச்சியிலும், 11 மணிக்கு டேவிபுரம் மாரியப்பன்-பாப்பா திருமண நிகழ்ச்சியிலும் கலந்துகொண்டார்.

பகல் 12 மணியளவில் மறைந்த மாவீரர்கள் கே. வி. கே. சாமி, தாளமுத்து ஆகியோரின் கல்லறைக்குச் சென்று வணக்கம் செலுத்தினர்.

இரவு 7 மணிக்கு சிவன்கோவில் திடலில் தோழர் உமையணன் தலைமையில் நடந்த மாபெரும் பொதுக்கூட்டத்தில் கலந்துகொண்டு, இன்றைய அரசியல் நிலையை விளக்கியும், வடநாட்டு ஆதிக்கம், இந்தித் திணிப்பு இவைகளைக் கண்டித்தும் விரிவானதொரு உரை நிகழ்த்தினார்.

பல கிளைக் கழகங்கள்-அமைப்புகள்-தனிப்பட்டவர்கள் சார்பில் கைத்தறித் துணிகளும், மலர் மாலைகளும் அவருக்கு அணிவிக்கப்பட்டன.

தோழர்கள் எம். எஸ். சிவசாமி, எஸ். கணபதி ஆகியோரும் பேசினர்.

## குமரன் சோடா பாக்டரி தொழிலாளர் தகராறு

சென்னை, நவ. 10—

குமரன் சோடா பாக்டரி தொழில் தகராறு சம்பந்தமாக தொழில் கோர்ட் நீதிபதி திரு. வி. பட்டாபிராமய்யா முன்னிலையில் சமரசம் ஏற்பட்டது. இரண்டு தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கியதன் விளைவாக அந்த இரு தொழிலாளர்களுக்கும் தலா 6 மாத நஷ்டஈடு கொடுக்கப்பட்டது.

## பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன்

### சுற்றுப்பயண நிகழ்ச்சிகள்

**பழனி:**

26—10—57 காலை 11 மணியளவில் பழனி செயராம் தியேட்டரில் நகர தி. மு. கழகச் சார்பில் ஓர் சிறப்புக்கூட்டம் செயலாளர் கா. வெங்கடாசலம் தலைமையில் நடைபெற்றது. 'நேற்று—இன்று—நாளை' என்ற தலைப்பில் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் சொற்பொழிவாற்றினார். சேலம் தேர்தல் வழக்கு நிதிக்கு ரூ. 150 பொதுச்செயலாளரிடம் அளிக்கப்பட்டது.

**சின்னாளப்பட்டி:**

வள்ளுவர் திடலில் 26-10-57 இரவு 9 மணிக்கு தோழர் எம். வீரண்ணன் தலைமையில் கூட்டம் நடைபெற்றது; தோழர்கள் ச. முத்துகிருஷ்ணன், அழகேசன், ஏ. எம். டி. நாச்சியப்பன், என். முத்து ஆகியோர் பேசியபின் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் திராவிடநாடு பிரிய வேண்டியதன் அவசியத்தை விளக்கியும், மத்திய ஆட்சியினர் இந்தியைக் கட்டாயமாகத் திணிப்பதைக் கண்டித்தும் பேசினார்.

**மன்னார்குடி:**

27—10—57 மாலை 6-30 மணியளவில், தோடியில், நகரச் செயலாளர் கே. பாலகிருட்டினன் தலைமையில் ஓர் மாபெரும் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் ப.நாராயணசாமி பேசியபின் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் பேசினார்.

பொதுச்செயலாளருக்குப் பல கிளைக்கழகங்கள் சார்பில் மலர் மாலைகளும், கைத்தறித் துண்டுகளும், சேலம் தேர்தல் வழக்கு நிதியும் அளிக்கப்பட்டன. நகரக் கிளையின் சார்பில் வரவேற்புரை வாசித்தளிக்கப்பட்டது.

**கொரடாச்சேரி:**

27-10-57 இரவு 11 மணிக்கு பொதுச்செயலாளர் அவர்கள் கொரடாச்சேரி வந்து சேர்ந்தார்.

வெண்ணவாசல் தி. மு. கழகக் கிளைக் கட்டிடத்தைப் பொதுச் செயலாளர் திறந்துவைத்தார். அங்கிருந்து மாபெரும் ஊர்வலம் தோழர் அ. நடராசன் தலைமையில் துவங்கி கூட்டம் நடைபெறும் காந்தி பூங்கா வந்தடைந்தது.

கொரடாச்சேரி தி. மு. கழக முயற்சியால் ஏற்படுத்தப்பட்ட கலைவாணர் என். எஸ். கே. படிப்பகத்தைப் பொதுச்செயலாளர் திறந்துவைத்தார்.

இரவு 11-15 மணிக்கு பொதுக் கூட்டம் தோழர் த. கோவிந்தராசு தலைமையில் துவங்கியது. தலைவர் முன்னுரைக்குப் பின் தோழர் எஸ். எம். வைத்திலிங்கம் பேசினார்.

இறுதியாகப் பொதுச்செயலாளர் அவர்கள் தற்கால அரசியல் நிலைமை, திராவிடநாடு பிரிய வேண்டிய அவசியம்பற்றி விளக்கவுரையாற்றினார்.

பொதுச்செயலாளர் அவர்களுக்கு என். எஸ். கே. படிப்பகம், கொரடாச்சேரி தி. மு. கழகம், வெண்ணவாசல் தி. மு. க., அபிவிருத்தீசுவரம் தி. மு. க., பெருமாளகரம் தி. மு. க., அம்மையப்பன், ஆப்பாவூர், கமுகக்குடி தி. மு. க. கிளைகள், கொரடாச்சேரி விவசாயிகள், கம்மங்கொல்லை விவசாயிகள், மற்றும் தனிப்பட்ட நண்பர்கள் சார்பில் மாலைகளும், கைத்தறி ஆடைகளும் அணிவிக்கப்பட்டன.

கொரடாச்சேரி தி. மு. க. சார்பில் சேலம் தேர்தல் வழக்கு நிதிக்காக ரூ.10 அளிக்கப்பட்டது.

## அரியக்குடி தி. மு. க. துவக்க விழா

### கண்ணதாசன் தென்னரசு கலந்துகொண்டனர்

4—11—57-ல் காரைக்குடியை அடுத்த அரியக்குடியில் தி. மு. கழகத் துவக்க விழா நடைபெற்றது; தோழர் எஸ். எஸ். தென்னரசு தலைமை வகித்தார்.

"இந்த நாட்டில் இயங்கும் கட்சிகளில் தி. மு. கழகம்தான் தாய் நாட்டுக் கட்சி; தாய் நாட்டுக் கட்சியால்தான் தாய் மொழியையும், பண்பாட்டையும் பாதுகாக்க இயலும்; மற்ற மற்ற கட்சியெல்லாம் தமிழகத்தையும், தமிழ் மொழியையும் வடநாட்டுக்குக் காட்டிக்கொடுப்பவையாகும்; தி. மு. கழகத்திற்கு யார் மீதும் எந்த இனத்தின் மீதும் துவேஷமில்லை; திராவிடர் நாட்டில் யாரும் வாழலாம்" என்று அவர் தனது தலைமையுரையில் குறிப்பிட்டார்.

பின்னர், தோழர் கண்ணதாசன் அவர்கள் பேசுகையில், 'திராவிடர்கள் இயற்கைச் சக்திகளை வணங்கிக்கொண்டுவந்த காலத்தில் யார் கடவுள் என்ற தகராறு இல்லை; கடவுளுக்கு உருவம் கற்பித்த பிறகுதான் கடவுள் எத்தனை என்ற பிரச்சினை கிளம்பிற்று; ஆண்டவனைப் பற்றிய தகராறைக் கிளப்பியவர்கள் கடவுளுக்கு உருவம் கற்பித்தவர்களே' என்றார்.

## ஆமதாபாத்-மணிநகர் தி.மு.க. ஆண்டு விழா

ஆமதாபாத்-மணிநகர் கிருஷ்ணா தமிழ் வித்தியாலயத்தின் எதிரிலுள்ள திடலில், கலைவாணர் அரங்கில் தோழர் ச. சந்திரன் தலைமையில் மணிநகர் தி. மு. கழக 5-வது ஆண்டு நிறைவு விழா சிறப்புடன் நடைபெற்றது.

விழாவினை முன்னிட்டு தமிழ் நாட்டினின்றும் வருகைதர விருந்த தோழர் காஞ்சி-கல்யாணசுந்தரம் அவர்கள் எதிர்பாராதவிதமாக வர இயலாததால் தோழர் வி. நாகராசன் வரவேற்புரை நிகழ்த்தி கூட்டத்தை ஆரம்பித்தார்.

தோழர்கள் சு. புரட்சிமாறன், புதுவை-வைத்தியநாதன், இரா. நடராசன், இரா. வைத்திலிங்கம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

நரோடா வ. உ. சி. நாடக மன்றத்தாரால் தோழர் மு. கருணாநிதி தீட்டிய 'நச்சுக்கோப்பை' என்னும் நாடகம் நடத்தப்பெற்றது; பிறகு, பாப்புநகர் தி. மு. கழகக் கலைக் குழுவினர் 'பிழைக்கும்வழி' என்னும் நகைச்சுவை நிகழ்ச்சியை நடத்தினர்.

## கருங்காலிப்பட்டு

### ஊராட்சி மன்றம் ஆரம்ப விழா

24—10—57 மாலை 4 மணிக்கு நடைபெற்ற கருங்காலிப்பட்டு ஊராட்சி மன்ற ஆரம்ப விழாவில் உறுப்பினர்கள் பதவி எடுத்துக்கொண்டார்கள்; தோழர் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ., அவர்கள் தலைமை வகித்தார்.

ஊராட்சி மன்ற உறுப்பினர்களைப் பாராட்டி திரு. துரை ஜெயராமன் பேசினார்.

இந்த ஊராட்சி மன்றத் தலைவராக ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பட்ட திரு. எல். ஆதிகேசவலு அவர்களையும், மற்ற உறுப்பினர்களையும் பாராட்டியும், கிராம பஞ்சாயத்து போர்டுமூலம், குடிதண்ணீர் விளக்கு வசதி, சுகாதார வசதி, அறிவு வளர்ச்சிக்காகப் படிப்பகம், வானொலிநிலையம் போன்ற வசதிகளை ஒற்றுமையுடன் போராடிப் பெறுமாறு தோழர் ஏ. கோவிந்தசாமி கேட்டுக்கொண்டார்.

திரு. பி. திருகாமு அவர்கள், பஞ்சாயத்து போர்டுக்கு உதவித் தலைவராக ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்

## பஞ்சாயத்து போர்டு தேர்தல்கள்

**பேக்கரும்பன்கோட்டை:**

ஒரத்தநாடு தாலுகா பேக்கரும்பன் கோட்டை, புலவன்காடு கிராமங்களின் பஞ்சாயத்து போர்டு தேர்தல் பட்டுக்கோட்டை டிப்டி பஞ்சாயத்து ஆபீசரால் அக். 28, 30-ந்தேதிகளில் நடத்தப்பட்டது.

பேக்கரும்பன் கோட்டை பஞ்சாயத்து போர்டுக்கு தோழர் அ. பழனிவேல் தலைவராகவும், தோழர்கள் கு. அய்யாவு சேதிரார், இரா. மாணிக்கம் சேனைகொண்டார், ந. சின்னக்கண்ணு சேனைகொண்டார், சி. சிங்காரம் சேனைகொண்டார், இரா.மேனப்பன் சேனைகொண்டார், சி. பெருமாள் சாம்பான் ஆகியோர் உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**புலவன்காடு:**

புலவன்காடு பஞ்சாயத்துக்கு தோழர் சி. சுப்பையன் தலைவராகவும், தோழர்கள் அ. பக்கிரிசாமி மல்லிகொண்டார், ப. முருகைய மல்லிகொண்டார், வை. சின்னக்கண்ணு மல்லிகொண்டார், து. வீராசாமி மல்லிகொண்டார், தொ. மெய்க்கண் சாம்பான் ஆகியோர் உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**கல்லல்:**

கல்லலில் 15—10—57 காலை பஞ்சாயத்து போர்டு தேர்வுகள் நடைபெற்றன. மொத்தம் எட்டு இடங்கட்குத் தேர்வுகள் நடைபெற்றன. அவற்றுள் ஒன்றிற்கு தி. மு. கழகக் கிளையின் செயற்குழு உறுப்பினருள் ஒருவரான புரண்டி பொ. மீனாட்சிசுந்தம் அவர்கள் போட்டியிட்டு ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

**சென்னப்பநாய்க்கன்பாளையம்:**

15—10—57-ல் நடைபெற்ற ஊராட்சி மன்றத் தேர்தலில் தி. மு. கழக ஆதரவில் வெற்றி பெற்ற தலைவர் ப. பொ. சோமசுந்தர முதலியார் அவர்களுக்கும், ஊராட்சி மன்ற உறுப்பினர்களுக்கும் 16—10—57-ல் தோழர் ஆ. கோவிந்தசாமி தலைமையில் ஓர் தேநீர் விருந்து நடைபெற்றது. ஊராட்சி மன்றத் தலைவரையும், உறுப்பினர்களையும் பாராட்டி தோழர் சே. மூசா பேசினார்; தலைவர் முடிவுரைக்குப் பின் ஓர் புகைப்படம் எடுக்கப்பட்டது.

## அரியலூர் முத்தமிழ் மன்றத் திறப்பு விழா

22—10—57 இரவு 9-30 மணியளவில் மேற்படி மன்றத் திறப்பு விழா தோழர் எஸ். கே. ஏ. முருகையா தலைமையில் நடைபெற்றது; தோழர் கோ. சிவப்பெருமான் கழகக் கொடியேற்றினார்; முத்தமிழ் மன்ற அலுவலகத்தை தோழர் இரா. நாராயணன் திறந்துவைத்தார்; அண்ணா அவர்களின் படத்தையும் முத்தமிழ் மன்றத்தையும் துவக்கி வைத்து தோழர் கி. மனோகரன் அவர்கள் பேசுகையில் 'இம்மன்றம் தமிழை வளர்க்கவும், நல்ல பல கருத்துக்களை நாட்டு மக்களுக்கு எடுத்துக் கூறவும் பயன்பட வேண்டும்' என்று கேட்டுக்கொண்டார்.

இரவு 10 மணிக்கு, பெட்ரோல் பங்கிற்கு எதிரில் தி. மு. கழகப் பொதுக்கூட்டம் நடைபெற்றது; தோழர் மு. மாரிமுத்து தலைமை தாங்க, தோழர்கள் இரா சின்னையன் கோ. சிவப்பெருமான் இரா. நாராயணன் ஆகியோர் பேசியபின் தோழர் கி. மனோகரன் அவர்கள் நீண்டதோர் சொற்பொழிவாற்றினார்.

இந்தியைக் கைவிட வேண்டிய தீர்மானமும், பொதுக்கூட்டத் திடலுக்கு என். எஸ். கே. திடல் என்று பெயரிட வேண்டுமென்று அரியலூர் ஊராண்மைக் கழகத்தாரைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானமும் நிறைவேற்றியபின் தலைவர் முடிவுரை கூறினார்.

## விதிக்கப்பட்ட தடை தளர்த்தப்படுகிறது

### காரணம் பற்றி விளக்கம்

சென்னை, நவ. 10—

சோடா வர்த்தகத்தினர் கோலி சோடா பாட்டில்களை உபயோகிக்க அனுமதிப்பதென்று அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. ஆனால் இதற்கு நிபந்தனை உண்டு.

கோலி சோடா பாட்டில்கள் அடிக்கடி வெடித்து விடுகின்றன என்பதாலும், அதன் மூலம் மக்களுக்குக் காயம் முதலியன ஏற்பட காரணமாகிறது என்பதாலும், அவைகளை உபயோகிப்பதைத் தடை செய்ய எண்ணப்பட்டது. தகுந்த முன்னெச்சரிக்கை ஏற்பாடுகள் செய்து, அத்தகைய விபத்துகளை திட்டமாகத் தவிர்க்க முற்படுவதாக வர்த்தகர்கள் கேட்டுக்கொண்டதின்பேரில், அரசாங்கம் தனது பழைய உத்தரவை சிறிது மாற்றியிருக்கிறது. எனினும், காலக்கிரமத்தில் இவைகளின் உபயோகம் எப்படியும் விலக்கப்பட்டாகவேண்டும் என்பதை வர்த்தகர்கள் உணரவேண்டும் என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

## நாட்டியத் தடையை நீக்க யோசனையாம்!

ஆலயங்களில் பெண்கள் நடனமாடுவதற்கு விதிக்கப்பட்டுள்ள தடையை, சென்னை போலீஸ் அமைச்சர் பக்தவத்சலம் ஆதரிக்கவில்லையாம்!

இந்தத் தடையை நீக்குவது பற்றி அவர் யோசித்து வருகிறாராம்!

சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெற்ற பாராட்டுவிழா ஒன்றில் பேசிய அவர், இவ்வாறு தடை விதிக்கப்பட்டால் நாட்டியக் கலை எப்படி வளரும் என்று கேள்வி எழுப்பியதுடன், பொது மக்கள் கருத்தை யறிந்து, சட்ட ஆலோசனைகளைக் கேட்டபின்னர், இந்தச் சட்டத்தைத் திருத்துவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று கூறியுள்ளார்.

## தெரிந்து கொள்ளுங்கள்

சென்னை மாநில அரசாங்க பஸ் போக்குவரத்தின் கன்னியாகுமரி கிளை செப்டம்பர் மாதத்தில் பெற்ற வரவு ரூ. 2,48,000. மொத்தமுள்ள 88 பஸ்களில் சராசரியாக 56 பஸ்கள் ஓடின. மொத்தம் ஓடின மைல்கள் 2,39,497; மொத்தம் பிரயாணம் செய்தவர்கள் 8,56,248 பேர்.

## இடிவிழுந்ததால் நஷ்டம்

3—11—57 இரவு பெய்த மழையின்பொழுது பொள்ளாச்சி ஏ. பி. டி. ரோடு, 'நம் நாடு உணவு விடுதி' உரிமையாளரும், தி. மு. கழக ஆதரவாளருமான தோழர் ஆர். பாலசுப்பிரமணியம் அவர்கள் கடையில் 'இடி' இறங்கியதால், சுமார் ரூ. 1,000 பெறுமானமுள்ள பொருள்கள் சேதமேற்பட்டது குறித்து சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் சப்-கலெக்டர் அவர்களுக்கும் செய்தி தெரிவிக்கப்பட்டு, உரிய உதவி செய்யும்படி கோரப்பட்டுள்ளது.

## அண்ணா அறிவு வளர்ச்சி மன்றத் துவக்க விழா

சென்னை 50-வது வட்டம் அண்ணா அறிவளர்ச்சி மன்றத் திறப்பு விழா 7-10-57 காலை 9 மணிக்கு தோழர் ஜோதி தலைமையில் நடைபெற்றது.

தோழர் சாதா கழகக் கொடியை ஏற்றிவைத்து விளக்கவுரையாற்றினார்; தோழர் சி. சித்தனைச்செழியன் மன்றத்தைத் திறந்துவைத்துப் பேசினார்; தோழர் பெ. இரத்தினவேலு மறைந்த இலட்சிய வீரர் தோழர் இராசமணி அவர்களின் படத்தைத் திறந்துவைத்து, அன்னாரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கினார்; மேலும் பல தோழர்கள் சொற்பொழிவாற்றினர்.

# நிதி அமைச்சர் காட்டும் கண்ணியம்!

சென்னை, நவ. 11—

"எதிர்க்கட்சியாக உள்ள தி. மு. கழகம், பொறுப்புள்ள எதிர்க்கட்சியாகப் பணியாற்றவேண்டும். பிரச்சினைகள் வரும்போது சிறு பிள்ளைத்தனமாகக் கண்ணை மூடிக்கொள்வதும், ஓடிவிடுவதும் கூடாது"

என்று, தேசிய கௌரவ பாதுகாப்புச் சட்டத்தைப் பற்றிப் பேசுகையில் சட்டமன்றத்தில் நிதி அமைச்சர் கூறினர்.

தொடர்பில்லாத வகையில் அவர் இவ்வாறு பேசுகையில், தோழர் எம். பி. சுப்பிரமணியம் குறுக்கிட்டு, "தலைவர் அவர்களே! 'வெளி நடப்பை' (Walk out) அமைச்சர், 'ஓடுவது' என்று கூறுவது ஒழுங்கா?" என்று கேட்டார்.

அவையில் பரபரப்பு ஏற்பட்டது. ஒரு சிலர் அமைச்சரின் கண்ணியக்குறைவான பேச்சைக் கேட்டு அருவருப்படைந்தனர்; வேதனைப்பட்டனர்; நிதி அமைச்சர் இவ்வளவு தரக்குறைவாக சபையில் நடப்பார் என்று எவரும் எதிர்பார்க்கவில்லை.

மீண்டும் அமைச்சர், "அவர்கள் நடப்பதைப் பொறுத்துதான் 'ஓடுவது' என்று நான் கூறினேன்" என்று மீண்டும் தரக்குறைவாகப் பேசினர்.

தலைவர் குறுக்கிட்டு, 'ஒழுங்குப் பிரச்சினைகளுக்கே இடமளிக்க மாட்டேன்; அமைச்சர் பேசும்போது யாரும் குறுக்கிடக் கூடாது; எல்லோரும் தாக்கவும், மீண்டும் தாக்கப்பட்டால் ஏற்கவும் தயாராக இருக்கவேண்டும்' என்று, வாய்ப்பூட்டு உத்தரவு போட்டார்.

இதற்குள் தோழர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி அவர்கள், "இப்போது அமைச்சர் பேசினரா, அல்லது கத்தினரா?" என்று கேட்டார்; சபை சிரிப்புக்கடலில் மூழ்கியது!

# இப்படியும் கூறுகிறர் அமைச்சர்!

சென்னை, நவ. 11—

"எண்ணங்களை யாரும் கட்டுப்படுத்திவிட முடியாது; யாரிடமும் அந்த சக்தி இல்லை; தன் எண்ணங்களையே கட்டுப்படுத்த முடியாதபோது, பிறருடைய எண்ணங்களை உண்மையில் கட்டுப்படுத்திவிட முடியாது"

என்று நிதி அமைச்சர் சுப்பிரமணியம் தேசிய கௌரவத்தைக் காப்பாற்றக் கொண்டுவரப்பட்ட சட்டத்தைப் பற்றிப் பேசுகையில் குறிப்பிட்டார்.

# அரசாங்கத்தின் மீது

## குற்றம் சுமத்தப்படுகிறதாம்!

### அதற்காகவே சட்டமாம்!

சென்னை, நவ. 11—

"இந்தச் சட்டம் கட்சி பலத்தைக் கொண்டு செய்யப்படுவதல்ல.

"ஏதோ ஒரு காரணத்தினுல் அரசாங்கத்தின்மீது குற்றம் சாட்டப்படுகிறது; அதை இந்தச் சட்டம் போக்கும்"

என்று அமைச்சர் பக்தவத்சலம் இன்று சட்டமன்றத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்.

"எந்தவித உதவியும் பெருத தி. மு. க. தலைவர் இவ்வளவு உருக்கமுடன் பேசியது அவருடைய பெருந்தன்மையைக் காட்டுகிறது; அதற்காக நான் அவரைப் பாராட்டுகிறேன்"

என்று அண்ணவை நோக்கி அமைச்சர் மேலும் கூறினர்.

"பெரியார்—காமராசர் தொடர்பு, கூறப்படுவதுபோல அல்லவென்றும், பெரியாரைச் சந்திப்பதில் காமராசருக்கு நம்பிக்கை இல்லை என்றும், பெரியாரை அண்ணு அவர்களே சந்திக்க வேண்டும் என்றும் அமைச்சர் யோசனைகூறி, சட்டத்தை நிறைவேற்றினர்.

# நூதனமான சட்டந்தானும்!

## அமைச்சரே கூறுகிறர்

சென்னை, நவ. 11—

தேசிய கௌரவத்திற்கு இழுக்கு தேடுவோரைக் கண்டிக்கும் மசோதா, இன்று சட்டமன்றத்தில் கொண்டுவரப்பட்டது.

தி. மு. கழகத்தினர் தவிர மற்ற எல்லாக் கட்சியினரும்—பி. சோ., கம்யூனிஸ்டு, சோஷியலிஸ்டு, பார்வர்ட் பிளாக், தேசிய சனநாயகக் காங்கிரஸ் உட்பட—சட்டத்தை ஆதரித்தனர்.

பி. சோ. தலைவர் சின்னதுரை பேசுகையில், 'இந்தச் சட்டம் மனஉணர்ச்சியைக் கட்டுப்படுத்தாது, எதிரிகளுக்கு முக்கியத்துவத்தையும் அந்தஸ்தையும் தருவதாகும்' என்று கூறினர்.

கம்யூனிஸ்டுத் தலைவர் கல்யாணசுந்தரம், 'சட்டத்தின் மூலம் உணர்ச்சியை அடக்கிவிட முடியாது' என்பதையும் கூறினர்.

தேசிய சனநாயகக் கட்சியினர், 'அதிக தண்டனை தேவை என்றும் மதம், வேதம் போன்ற நூல்களுக்கும் இதன் மூலம் பாதுகாப்பு தரப்பட வேண்டும்' என்றும் கோரினர்.

சட்டத்தைக் கொண்டுவந்த அமைச்சர் பக்தவத்சலம் பேசுகையில், சட்டம் விசித்திரமானது என்பதை ஒருவாறு வர்ணித்தார்.

'பைத்தியத்திற்குக்கூட சட்டம் இருக்கும்போது, இதற்கு இருப்பதில் தவறில்லை' என்று நியாயம் பேசினர்.

# மதச் சின்னம் பற்றிய நம்பிக்கை

## அமைச்சர் பக்தவத்சலம் கருதுவது என்ன?

இந்து அறநிலையப் பாதுகாப்பு இலாகாவில், கோயில் நிர்வாகிகளாக 356 பேர் பணியாற்றுகின்றனர் என்றும், அவர்களில் 73 பேர் பின்தங்கிய வகுப்பையும், 3 பேர் தாழ்த்தப்பட்ட வகுப்பையும் சேர்ந்தவர்கள் என்றும் அமைச்சர் பக்தவத்சலம் சட்டமன்றத்தில் கேள்வி நேரத்தின்போது தெரிவித்தார்.

"கோயில் நிர்வாகிகளாகத் தாழ்த்தப்பட்டவர்களை நியமிக்க ஏதேனும் கட்டுப்பாடுகள் உண்டா?"

என்று தோழர் சி. நடராசன் கேட்டார்.

'உண்டு' என்று அமைச்சர் பதிலளித்தார்.

"கோயில் நிர்வாகிகளாக நியமிக்கப்படுபவர்களுக்கு ஆண்டவனிடம் நம்பிக்கை இருக்க வேண்டும் என்று கூறப்படுகிறதே, அந்த இலாகா அமைச்சரின் நெற்றியில் எந்த மதச் சின்னமும் இல்லாதது ஏன்?"

என்று, தோழர் ஏ. கோவிந்தசாமி கேட்டார்.

"மதத்தைப் பற்றிய மூட நம்பிக்கை எனக்கில்லை" என்று அமைச்சர் பதிலளித்தார்.

# லாரி விபத்தைத் தவிர்க்க வழி?

## தோழர் எம். பி. சுப்பிரமணியம் யோசனைக்கு அமைச்சர் பதில்

சென்னை, நவ. 11—

"லாரிகள் இரவில் ஓடுவதால் ஏற்படும் விபத்துக்களைக் குறைப்பதுபற்றி அரசாங்கம் ஆராய்ந்து வருகிறது" என்று சட்டமன்றத்தில் அமைச்சர் இராமய்யா தெரிவித்தார்.

"லாரிகளில் பொருத்தப்பட்டுள்ள வேகக்கருவிகளை மாற்றி வேகத்தைக் குறைப்பதன் மூலம், ஏற்படும் விபத்துக்களைத் தவிர்க்கலாமல்லவா?" என்று தோழர் எம். பி. சுப்பிரமணியம் கேட்டார்.

"அதுபற்றி கவனித்து ஆவன செய்கிறோம்" என்று அமைச்சர் பதிலளித்தார்.

# 'இந்திய மொழி என்பதற்குப் பதில் வட்டார மொழி என்று இருக்க வேண்டும்'

## கல்விச் சீர்திருத்தம் பற்றி க. அன்பழகன்

சென்னை, நவ. 9—

கல்வி பற்றிய 'வெள்ளை அறிக்கை' மீது நடைபெற்ற விவாதத்தின்மீது பேசுகையில் தோழர் க. அன்பழகன் அவர்கள் கூறிய கருத்து இங்கு தரப்படுகிறது:—

"நாட்டின் பொறுப்பை உணர்ந்து கல்விச் சீர்திருத்தம் செய்ய முயற்சித்து, 'வெள்ளை அறிக்கை' கொண்டுவந்தமைக்கு நான் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

"பெயரளவில் 'வெள்ளை அறிக்கை' என்று கூறப்படுவதற்குகூட ஒரு திருத்தம் கூற விரும்புகிறேன். 'வெள்ளை' என்றால் 'அறியாமை' என்று பொருள்படும்; அதைவிட, 'பச்சை அறிக்கை', 'முதல் அறிக்கை' என்று வேண்டுமானுல் திருத்திக் கூறலாம் என்பது என் கருத்து.

"இந்தச் சபையில் 'வெள்ளை அறிக்கை' பற்றி விவாதிக்க உரிமை தரப்பட்டுள்ளதே தவிர, கூறப்படும் கருத்துக்களை அரசாங்கம் நிறைவேற்றுவதாகத் தெரியவில்லை.

கல்வி பற்றி அவ்வப்போது, அரசாங்கத்திற்கு யோசனை கூற ஒரு நிரந்தரக் குழு அமைக்க வேண்டும் என்று வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

"கல்வி பற்றிய திட்டங்களை சட்டமாக இயற்ற வேண்டும் என்று அமைச்சர் கூறினர். கட்சி பலத்தைக் கொண்டு சட்டமாக்குவதானுல், அதைப் பரீட்சித்துப் பார்த்து, பின்னர் செய்ய வேண்டும்; எனவே, சட்டம் அவசியமல்ல—அதற்குத் தேவையும் இல்லை.

"நிர்வாகத்தில் வேண்டுமானுல் அரசாங்கம் தலையிடட்டும்; ஆனுல், கல்வித் துறையில் தலையிடுவதில்லை என்ற கோட்பாட்டை காங்கிரஸ் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும்.

"நிபுணர்களின் கருத்தையும், கல்வித் துறையில் அனுபவம் பெற்றவர்களையும் கலந்துகொண்டு மாற்றம் செய்ய வேண்டும்.

"புத்தகம் வெளியிடும் தொழிலை அரசாங்கம் ஏற்று நடத்துவது ஏற்றதல்ல; அந்தப் பொறுப்பை இப்போது ஏற்பது தேவையற்றது; அது, சர்வாதிகாரப்போக்கை வளர்ப்பதுமாகும்; எனவே, இப்பொறுப்பை தனியார் துறைக்கே விட்டு, அவர்கள் பெறும் இலாபத்தில் அரசாங்கம் பங்கு பெறவேண்டும். போட்டிகளைத் தவிர்த்து நல்ல சூழ்நிலையை உருவாக்க முன்வர வேண்டும்.

அதைவிடுத்து, அரசாங்கமே இத்துறையில் செயல்பட முனைவது, குறைகளைத்தான் வளர்க்கும். கண்காணிப்பு இருப்பதில் தவறில்லை.

"தமிழ் நாட்டில் மூன்று மொழிகளைக் கற்க வேண்டியுள்ளது. அடிப்படையை ஆராயும்போது, மூன்று விதமான தனி எழுத்து வடிவமுள்ளவைகளை நாம் கற்க வேண்டும்; மற்ற மாநிலத்தவருக்கு இந்த நிலை இல்லை. தமிழ் சனநாயக மொழி; புராதன மொழியுமாகும்.

"தமிழ் நாட்டில் இந்தி படிப்பது இந்தியைப் புகுத்தப் பயன்படுகிறது. இந்தி தேவைப்படுபவர்கள் அவசியத்தை முன்னிட்டுக் கற்கலாம். எனவே, ஏதாகிலும் ஒரு இந்திய மொழி என்பதற்குப் பதிலாக, வட்டாரமொழியைக் கற்கலாம் என்று திருத்த வேண்டும்.

"ஆரம்ப ஆசிரியர்கள், ஓராசிரியர்களின் குறைகளைக் களைந்தெறிய வேண்டும்."

# புதிய பஸ் அனுமதிகள்

## தோழர் எம். பி. சுப்பிரமணியம் கேள்விக்கு அமைச்சர் பதில்

சென்னை, நவ. 9—

"புதிதாக பஸ் ஓட்ட தரப்படும் அனுமதி ஏற்கெனவே பஸ் ஓட்டுபவர்களுக்கே தரப்படுவது புதிய முயற்சிகளைத் தடுப்பதாகுமல்லவா?"

என்று தோழர் எம். பி. சுப்பிரமணியம் சட்டமன்றத்தில் கேட்டார்.

"புதிதாக பஸ் ஓட்ட எப்போதும் தடையல்ல; கொஞ்சகாலத்திற்குப் பிறகு நிலைமை மாறும்" என்று அமைச்சர் இராமய்யா பதிலளித்தார்.

## எசமானர்களின் கட்டளையைக்

# கண்டிக்க அச்சம்?

### கழக உறுப்பினர் கேள்விக்கு அமைச்சர் தரும் பதிலின் விசித்திரம்

சென்னை, நவ. 9—

"கைத்தறி விற்பனை மூலம் தரப்படும் 'தள்ளுபடி' (ரிபேட்) யை 9 புதிய காசுகளிலிருந்து 6 புதிய காசுகளாக மத்திய அரசாங்கம், சென்னையைக் கலக்காமல் எதேச்சாதிகாரமாகக் குறைத்துவிட்டது; இதற்குக் காரணமும் கூறப்படவில்லை; இதன் காரணமாக கைத்தறி வியாபாரம் பாதிக்கப்படும் என்பது உண்மைதான்"

என்று அமைச்சர் வெங்கட்ராமன் கூறினர்.

எம். பி. சுப்பிரமணியம்:—"9 புதிய காசுகளிலிருந்து 6 புதிய காசுகளாகத் தள்ளுபடியை—காரணம்கூடக் கூருமல் மத்திய அரசாங்கம் குறைத்ததைக் கண்டிக்க அரசாங்கம் முன்வருமா?"

"அதனுல் பழைய 'ரிபேட்' வந்துவிடாது" என்று அமைச்சர் கூறினர்.

## கேள்விக்குப் பதில் கூருமல்

# சிரிக்கிறர் அமைச்சர்!

### துறைமுகங்கள் விரிவுபடுத்துவது பற்றிக் கழக உறுப்பினர் கேள்வி

சென்னை: நவ. 9—

"'மேஜர்' துறைமுகம்; 'மைனர்' துறைகம் என்றால் என்ன என்பதை அமைச்சர் விளக்குவாரா?" என்று எதிர்க்கட்சித் தலைவர் வி. கே. இராமசாமி சட்டமன்றத்தில் கேட்டார்.

அமைச்சர் கக்கன் எதும் கூருமல் சிரித்தார்.

பிறகு, தோழர் எம். பி. சுப்பிரமணியம், 'சென்னைத் துறைமுகத்தில் ஏற்றுமதி—இறக்குமதி நெருக்கடி இருப்பதால், தூத்துக்குடித் துறைமுகத்தை விரிவாக்குமாறு மத்திய சர்க்காரிடம் சென்னை அரசாங்கம் வற்புறுத்துமா?' என்று கேட்டார்.

'1920 முதல் நடைபெற்று வருகிறது' என்று அமைச்சர் பதிலளித்தார்.

"நெய்வேலியில் நிலக்கரித் தொழிற்சாலை அமைக்கப்பட்டிருப்பதன் காரணமாகக் கடலூர் துறைமுகத்தை விரிவாக்கும் நோக்கம் அரசாங்கத்திற்கு உண்டா?"

என்று தோழர் ஏ. கோவிந்தசாமி கேட்டார்.

'தனிக் கேள்வி போட வேண்டும்' என்று அமைச்சர் கூறினர்.

# திட்டத்திற்குச் சமாதி!

சென்னை, நவ. 9—

"சேது சமுத்திரத் திட்டம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இடம் பெறவில்லை" என்று அமைச்சர் கக்கன், சட்டமன்றத்தில் கேள்வி நேரத்தின்போது தெரிவித்தார்.

## தமிழ் வளர்ச்சி மன்றத் துவக்கவிழா

14—11—57 மாலை, சென்னை அடுத்த மடுவான்கரை—மேட்டுப்பாளையத்தில் தமிழ் வளர்ச்சி மன்றத் துவக்கவிழா, தோழர் எம். இரங்கநாதன் தலைமையில் நடைபெறும்; தோழர்கள் க. அன்பழகன் எம்.எல்.ஏ., அ. ச. நடராசன், புகாரி மற்றும் பலர் பேசுவர்.

## சொற்பயிற்சிக் கூட்டம்

14—11—57 இரவு 9-மணிக்கு சென்னை 47-வது வட்டம் தியாகராயர் மன்றத்தில் தோழர் அரிகிருஷ்ணன் தலைமையில் 'இன்றைய ஆட்சி' என்னும் பொருள் பற்றிப் பலர் பேசுவர்.

## திருக்குறள் வகுப்பு

13—11—57 மாலை 6-30 மணிக்கு, பெத்துநாயக்கன் பேட்டை முருகேசமுதலித் தெரு 2-ம் எண்ணுள்ள கட்டிடத்தில் 'திருக்குறள் வகுப்பு' திரு. புலவர் கா. சி. தனக்கோட்டி அவர்களால் நடத்தப்பெறும்.

# இந்திக்கு எதிராக கோவை மாணவர் எழுச்சி

## வேலை நிறுத்தம்பற்றிய முழு விவரம்

இந்தித் திணிப்பிற்கு எதிராக கோவை நகர மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்து ஊர்வலம் நடத்தி கண்டனம் முழக்கியுள்ளனர்.

கடந்த 8-ந் தேதி வெள்ளியன்று கோவை அரசினர் கலைக் கல்லூரியைச் சேர்ந்த சுமார் 1,500 மாணவர்களும் வகுப்புகளுக்குச் செல்லாமல் வேலை நிறுத்தம் செய்து, நகரின் முக்கிய வீதிகள் வழியாக 'இந்தித் திணிப்பு ஒழிக'—'தமிழ் வாழ்க'—என்ற ஒலிமுழக்கங்கள் எழுப்பி, ஊர்வலமாக வந்து, சிதம்பரம் பூங்காவில்கூடி, 'இந்தியைத் திணிக்காதீர்' எனத் தீர்மானம் ஒன்று நிறைவேற்றியுள்ளனர்.

1,500 பேர் கொண்ட கல்லூரியில் 32 மாணவர்கள் மட்டுமே அன்று கல்லூரிக்குச் சென்றிருக்கின்றனர்.

வேலை நிறுத்தத்தை முன்னின்று நடத்திய தோழர் கோவை செழியன், மற்றும் துரை என்ற மாணவர் இருவரும் கைது செய்யப்பட்டு, பின், கூட்டத் துவக்கத்தின் போது விடுதலை செய்யப்பட்டிருக்கின்றனர்.

கூட்டத்தில் தோழர் பாஸ்கர் தலைமையில் தோழர்கள் முத்துசாமி, பெரியசாமி, இரமணன், வெங்கடேஷ், முருகேசன், கோவை செழியன், துரை ஆகியோர் பேசினர்.

மழை பெய்தும் ஊர்வலம் கலையாமலிருந்ததுடன், கல்லூரி மாணவர்களுடன் பல உயர்நிலைப் பள்ளிகளைச் சேர்ந்த மாணவர்களும் கலந்துகொண்டு இந்திக்கு எதிராக முழக்கமிட்டிருக்கின்றனர். (ந-நி.)

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடம் பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

